# ।। दक्षिणामूर्तिवर्णमालास्तोत्रम् ।।

# தக்ஷிணாமூர்தி வர்ணமாலாஸ்தோத்ரம்

(1)

ओमित्येतद्यस्य बुधैर्नाम गृहीतं
यद्भासेदं भाति समस्तं वियदादि ।
यस्याज्ञातः स्वस्वपदस्था विधिमुख्या-
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ஓ மித்யேதத்யஸ்ய புதைர்நாம க்ருஹீதம்
யத்பாஸேதம் பாதி ஸமஸ்தம் வியதாதி।
யஸ்யாஜ்ஞாதஃ ஸ்வஸ்வபதஸ்தா விதிமுக்யாஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

*ப்ரணவத்தை எவர்பெயராக அறிவாளிகள்* கூறுகிறார்களோ, ஆகாயம் முதலிய பூதங்கள் ஐந்தும் எவர் பிரசா தத்தால் பிரகாசிக்கின்றனவோ, பிரம்ன் முதலியோர் எவரது ஆணைக்கிசைந்து தத்தம் நிலையில் இயங்குகின்றனரோ அத்தகையதக்ஷிணாமூர்த்தியை நேராகக்காண்கிறேன்.

(2)

नम्राङ्गाणां भक्तिमतां यः पुरुषार्था-
न्दत्वा क्षिप्रं हन्ति च तत्सर्वविपत्तीः ।
पादाम्भोजाधस्तनितापस्मृतिमीशं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

நம் ராங்காணாம் பக்திமதாயம் யஃ புருஷார்த்தான்
தத்வா க்ஷிப்ரம் ஹந்திச தத்னர்வ விபத்தீஃ।
பாதாம் போஜாதஸ் தநிதாபஸ்ம்ருதி மீசம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

தன்னை வணங்கிய பக்தர்களின் விருப்பத்திற்கிணங்க புருஷார்த்தங்களை கொடுத்து, அவர்களின் தொல்லைகள் பலவற்றையும் நீக்கி, தன் காலுக்கு அடியில் அபஸ்மாரத்தையும் அடக்கியுள்ளாரே அந்த தக்ஷிணாமூர்த்தியை நேரில் காண்கிறேன்.

(3)

मोहध्वस्त्यै वैणिकवैयासिकमुख्याः
संविन्मुद्रापुस्तकवीणाक्षगुणान्यम् ।
हस्ताम्भोजैर्बिभ्रतमाराधितवन्त-
स्तं प्रत्यञ्चं दक्षिणलवक्त्रं कलयामि ॥

மோஹத்வஸ்த்யை வைணிகவையாஸகிமுக்யாஃ
ஸம்வின்முத்ரா புஸ்தக வீணாக்ஷகுணான்யம்।
ஹஸ்தாம்போஜைர்பிப்ரத மாராதிதவந்தஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

நாரதர், சுகர் முதலிய முனிவர்கள் தமது மோஹம் தொலைய வேண்டி, சின்முத்ரை, புஸ்கம், வீணை, அக்ஷமாலை இவற்றை கைகளில் தரித்த எந்த கடவுளை ஆராதித்தனரோ அந்த தக்ஷிணாமூர்த்தியை நேரில் காண்கிறேன்.

(4)

भद्रारूढं भद्रदमाराधयितॄणां
भक्तिश्रद्धापूर्वकमीशं प्रणमन्ति ।
आदित्या यं वाञ्छितसिद्ध्यै करुणाब्धिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

பத்ராரூடம் பத்ரதம் ஆராதயித்ரூணாம்
பக்திச்ரத்தாபூர்வகமீசம் ப்ரணமந்தி।
ஆதித்யா யம் வாஞ்சித ஸித்யை கருணாப்திம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

பத்ராஸனத்தில் வீற்றிருந்து, தன்னை வழிபடுவோருக்கு க்ஷேமம் நல்கும் அந்த தக்ஷிணா மூர்த்யை நேரில் காண்கிறேன். ஆதித்யர்கள், தமது விரும்பம் நிறைவேற சிரத்தை பக்தியுடன் அவரை நித்யம் வணங்குகின்றனர். அவர் கருணைக்கடல் அன்றோ.

(5)

गर्भान्तस्थाः प्राणिन एते भवपाश–
च्छेदे दक्षं निश्चितवन्तः शरणं यम्।
आराध्याङ्घ्रिप्रस्फुरदम्भोरुहयुग्मं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि॥

கர்பாந்தஃஸ்தாஃ ப்ராணிநஃஏதே பவபாச
சேதே தக்ஷம் நிஸ்சிதவந்தஃ சரணம்யம்।
ஆராத்யாங்க்ரிப்ரஸ்புரதம்போருஹயுக்மம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

கர்பத்தின் நடுவே இருக்கும் பிராணிகள் எல்லாம் சம்சாரக்கயிறு (தொடர்) அற்றுப்போக, எந்த ஒருவரை தக்க வராக எண்ணி சரணம் அடைகிறார்களோ அந்த போற்றுதலுக்குரிய திருவடித்தாமரையுடைய தக்ஷிணாமூர்த்தியை நேரில் காண்கிறேன்.

(6)

वक्त्रं धन्याः संसृतिवार्धेरतिमात्रा–
द्भीताः सन्तः पूर्णशशाङ्कद्युति यस्य।
सेवन्तेऽध्यासीनमनन्तं वटमूलं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि॥

வக்த்ரம் தன்யாஃ ஸம்ஸ்ருதி வார்தே ரதிமாத்ராத்
பீதாஃ ஸந்தஃ பூர்ண சசாங்கத்யுதி யஸ்ய।
ஸேவந்தேஃத்யாஸீன மனந்தம் வட மூலம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

மிக பயங்கரமான சம்சாரக் கடலினின்று பயந்தவர்களான ஒரு சில புண்யவான்கள் எந்த கடவுளின் பூரண சந்திர பிரகாசமான முகத்தை ஸேவிக்கிறார்களோ, அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை நேராகவே காண்கிறேன். அவர் அந்தமில்லாத ஆலமரத்தினடியில் வீற்றிருக்கிறார்.

(7)

तेजः स्तोमैरङ्गदसंघट्टितभास्व –
न्माणिक्योत्थै र्भासितविश्वो रुचिरैर्यः ।
तेजोमूर्तिं खानिलतेजःप्रमुखाब्धिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

தேஜஃஸ்தோமை ரங்கத ஸங்கட்டித பாஸ்வத்
மாணிக்யோத்தைஃ பாஸிதவிச்வோ ருசிரைர்யஃ
தேஜோ மூர்திம் காநில தேஜஃ ப்ரமுகாப்திம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

எந்த ஒருகடவுள் தோள்வளையில் பதித்த உயர்ந்த மாணிக்கற்களின் சிரிய ஒளிகளால உலகையே பிரகாசிக்கச்செய்கிறரோ, அத்தகைய தேஜோமூர்தியான தக்ஷிணாமூர்த்தியை நேரில் காண்கிறேன். அவர் பஞ்சபூதங்கள் ஒடுங்கும் இடமானவர்.

(8)

दध्याज्यादिद्रव्यककर्माण्यखिलानि
त्यक्त्वा काङ्क्षां कर्मफलेष्वत्र करोति ।
यज्जिज्ञासारूपफलार्थी क्षितिदेव –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

தத்யாஜ்யாதித்ரவ்ய கர்மாண்யகிலானி
த்யக்த்வா காங்க்ஷாம் கர்மபலேஷ்வத்ர கரோதி।
யத்ஜிஜ்ஞாஸாரூபபலார்தீ க்ஷிதிதேவஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிண வக்த்ரம் கலயாமி॥

பூஸுராரகள் இவ்வுலகில் கர்மபலங்களில் விருப்பத்தை விட்டொழித்து எந்த ஒரு அகண்ட சிதாகாரத்தையறிய விருப்பம் ஒன்றையே மனதிற்கொண்டு தயிர், நெய், முதலிய த்ரவ்யங்களைக்கொண்ட கர்மாக்களைச் செய்கிறார்களோ அந்த தக்ஷிணாமூர்த்தியை நேராகக் காண்கிறேன்.

**(9)**

क्षिप्रं लोके यं भजमानः पृथुपुण्यः
प्रध्वस्ताधिः प्रोज्झितसंसृत्यखिलार्तिः ।
प्रत्यग्भूतं ब्रह्म परं सन्रमते च
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

க்ஷிப்ரம் லோகே யம் பஜமானஃ ப்ருது புண்யஃ
ப்ரத்வஸ்தாதிஃ ப்ரோஜ்ஜிதஸம்ஸ்ருத்யகிலார்திஃ
ப்ரத்யக்பூதம் ப்ரஹ்ம பரம் ஸன் ரமதே ச
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்தம்ரம் கலயாமி॥

எந்த ஒரு கடவுளை இந்த உலகில் சேவிப்பவன் மிகுந்த புண்யசாலியாய் மனக்கவலையகற்றி, சம்சாரத்தொல்லைகளையுமகற்றி, நல்லவனாய் அபரோக்ஷப்ரஹ்மத்தை கண்டு களிக்கிறானோ, அத்தகைய தக்ஷிணாமூர்தியை நேராகக்காண்கிறேன்.

**(10)**

णानेत्येवं यन्मनुमध्यस्थितवर्णा -
न्भक्ताः काले वर्णगृहीत्यै प्रजपन्तः ।
मोदन्ते संप्राप्तसमस्तश्रुतितन्त्रा -
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ணாநேத்யேவம் யன்மனு மத்யஸ்தித வர்ணான்
பக்தாஃ காலே வர்ணக்ருஹீத்யை ப்ரஜபந்தஃ
மோதந்தே ஸம்ப்ராப்த ஸமஸ்த சுருதி தந்த்ராஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிண வக்த்ரம் கலயாமி॥

எழுத்துக்களை உச்சரிக்க வேண்டுமே என்பதற்காக, எந்த ஒரு கடவுளின் மந்திரத்தின் உள்ளடங்கிய 'ண' 'ந' என்ற முத்துக்களை பக்தர்கள் ஜபிக்கிறார்களோ, அதன் மூலம் எல்லா வேதரஹஸ்யங்களையும் அறிந்து மகிழ்கிறார்களோ, அத்தகையக்ஷிணா மூர்த்தியை நேரிடையாகக் காண்கிறேன்.

**(11)**

मूर्तिश्छायानिर्जितमन्दाकिनिकुन्द –
प्रालेयाम्भोराशिसुधाभूतिसुरेभा।
यस्याभ्रा भाहासविधौ दक्षशिरोधि –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि॥

மூர்த்திః சாயா நிர்ஜித மந்தாகினீ குந்த
ப்ராலேயாம் போராசி ஸுதா பூதிஸுரேபா।
யஸ்யாப்ராபாஹாஸ விதௌ தக்ஷ சிரோதிம:
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷின வக்த்ரம் கலயாமி॥

எந்த கடவுளுடைய வடிவம், கங்கை, குந்தபுஷ்பம், பனிக்டல், அம்ருதம், விபூதி இவற்றின் காந்தியை விடமேலானதோ, எவருடைய கழுத்து நீலமேகச்யாமலமோ அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை கண்ணாரக் காண்கிறேனே!

**(12)**

तप्तस्वर्णच्छायजटाजूटकटाह –
प्रोद्यद्वीचीवल्लिविराजत्सुरसिन्धुम्।
नित्यं सूक्ष्मं नित्यनिरस्ताखिलदोषं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि॥

தப்தஸ்வர்ணச்சாய ஜடாஜூடகடாஹ
ப்ரோத்யத் வீசீவல்லி விராஜத்ஸுரஸிந்தும்।
நித்யம் ஸூக்ஷமம் நித்ய நிரஸ்தாகிலதோஷம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

உருக்கியதங்கம் போன்ற ஜடா முடியாகிய தொம்பையிலிருந்து வெளிவந்த அலைக்கொடிகள் தவழும் கங்கையை உடையவரும், நித்யமானவரும், ஸூக்ஷ்மமானவரும், கொஞ்சமும் தோஷமில்லாதவருமான தக்ஷிணாமூர்த்தியை நேரே காண்கிறேன்.

(13)

येन ज्ञातेनैव समस्तं विदितं स्या –
यस्मादन्यद्वस्तु जगत्यां शशशृङ्गम् ।
यं प्राप्तानां नास्ति परं प्राप्यमनादिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

யேந ஜ்ஞாதேநைவ ஸமஸ்தம் விதிதம் ஸ்யாத்
யஸ்மாத் அன்யத் வஸ்து ஜகத்யாம சசச்ருங்கம்।
யம் ப்ராப்தாநாம் நாஸ்திபரம் ப்ராப்ய மனாதிம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

எந்த ஒருவரைத்தெரிந்து கொண்டாலே மற்றெல்லாம் தெரிந்த தாகிவிடுமோ, எவரைத்தவிர வேறு பொருளே உலகில் இல்லையோ, எவரை அடைந்து விடடால் வேறெதுவும் அடையவேண்டியதில்லையோ அத்தகைய அனாதியான தக்ஷிணாமூர்தியை இதோ காண்கிறேன்.

(14)

मत्तो मारो यस्य ललाटाक्षिभवाग्नि –
स्फूर्जत्कीलप्रोषितभस्मीकृतदेहः ।
तद्भस्मासीद्यस्य सुजातः पटवास –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

மத்தோ மாரோ யஸ்ய லலாடாக்ஷிபவாக்னி
ஸ்பூர்ஜத்கீலப்ரோக்ஷித பஸ்மீக்ருத தேஹஃ
தத்பஸ்மாஸீத் யஸ்ய ஸுஜாதஃ படவாஸஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிண வக்ரம் கலயாமி॥

திமிருடன் வந்த மன்மதன் எந்த ஒரு கடவுளின் நெற்றிக்கண்களில் தோன்றிய அக்னியின் ஜ்வாலையால் பொசுக்கப்பட்டும், பஸ்மமாக்கபட்டும் போனானோ, அந்த பஸ்மமே எவருக்கு துணிக்கு இடும்வாசனை பொடியாக நன்கு அமைந்ததோ, அத்தகைய தக்ஷிணாமூர்தியை நேரே காண்கிறேன்.

(15)

ह्यम्भोराशौ संसृतिरूपे लुठतां त –
त्पारं गन्तुं यत्पदभक्तिर्दृढनौका।
सर्वाराध्यं सर्वागमानन्दपयोधिं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ஹ்யம்போராசெள் ஸம்ஸ்ருதிரூபே லுடதாம்தத்
பாரம் கந்தும் யத்பதபக்திஃ த்ருடநௌகா।
ஸர்வாராத்யம் ஸர்வாகமானந்தபயோதிம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிண வக்த்ரம் தலயாமி॥

ஸம்ஸாரக்கடலில் மூழ்கித்தத்தளிப் பவர்க்கு அதிலிருந்து கரை சேர எந்த ஒரு கடவுளின் திருவடிப்பற்று ஒன்றே படகாக அமையுமோ, அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை நேராகக்காண்கிறேன். அவர் அனைவராலும் போற்றப்பட்ட, அனைவருள்ளும் ஊடுருவிய ஆனந்தக்கடலாய் விளங்குகிறார்.

(16)

मेधावी स्यादिन्दुवतंसं धृतवीणं
कर्पूराभं पुस्तकहस्तं कमलाक्षम्।
चित्ते ध्यायन्यस्य वपुर्द्राङ्निमिषार्धं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

மேதாவீ ஸ்யாத் இந்துவதம்ஸம் த்ருதவீணம்
கர்பூராபம் புஸ்தகஹஸ்தம் கமலாக்ஷம்।
சித்தே த்யாயன் யஸ்ய வபுஃ த்ராங் நிமிஷார்தம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

சந்திரனை அணிந்தும், வீணையை தரித்தும், புஸ்தகத்தை கையில் கொண்டும் கர்பூரமேனியாய், கமலக்கண்ணராய் இருக்கும் எந்த ஒருவரை மனதில் தியானம் செய்வதால் மேதாவியாக ஆகிறானோ, எவருடைய உருவம் அரைநொடியாய் 'திடும்' எனத்தோன்றுமோ அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை காண்கிறேன்.

(17)

धाम्नां धाम प्रौढरुचीनां परमं य –
त्सूर्यादीनां यस्य स हेतुर्जगदादेः ।
एतावान्यो यस्य न सर्वेश्वरमीड्यं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

தாம்னாம் தாம ப்ரௌடருசீனாம் பரமம் யத்
ஸூர்யாதீனாம் யஸ்ய ஸ ஹேதுஃ ஜகதாதேஃ
ஏதாவான் யோ யஸ்ய ந ஸர்வேச்வர மீடயம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

ஒளிகளுக்கெல்லாம் ஒளி; அதாவது மிக அதிகமான பிரகாசமுள்ள சூர்யன் முதலியவர்களுக்கும் மேலானவர் அவர்; உலகுக்கு ஆதியான அவருக்கு மூலகாரணம் எதுவுமில்லை அளவுள்ள உலகம் முதலியவற்றிற்கு அவர் அளவுள்ளவரில்லை, அவர் சர்வேச்வரன், எல்லோராலும் போற்றப்படுபவர். அவர்தான் தக்ஷினாமூர்த்தி.

(18)

प्रत्याहारप्राणनिरोधादिसमर्थै
र्भक्तैर्दान्तैः संयतचित्तैर्यतमानैः ।
स्वात्मत्वेन ज्ञायत एव त्वरया य –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ப்ரத்யாஹார – ப்ராணநிரோ தாதிஸமர்த்தைஃ
பக்தைஃ தாந்தைஃ ஸம்யத சித்தைஃ யதமானைஃ।
ஸ்வாத்மத்வேந ஜ்ஞாயத ஏவ த்வரயா யஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

ப்ராணவாயுவை திருப்புவதிலும், அடக்குவதிலும் தேர்ச்சிபெற்ற பக்கதர்கள், புலன்களையும், மனதையும் அடக்கிவெகுவாக ஸாதனையில் ஈடுபட்டவர்கள், எவரொருவரை தனதாத்மா தான் என்று அறிகிறார்களோ, அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை நேரே காண்கிறேன்.

(19)

ज्ञांशीभूतान्प्राणिन एतान्फलदाता
चित्तान्तःस्थः प्रेरयति स्वे सकलेऽपि ।
कृत्ये देवः प्राक्तनकर्मानुसरः सं –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ஞாம்சீபூதான் ப்ராணிந ஏதான் பலதாதா
சித்தாந்தஃஸ்தஃப்ரேரயதி ஸ்வே ஸகலேऽபி।
க்ருத்யே தேவஃ ப்ராக்தநகர்மா நுஸரஃ ஸன்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்தரம் கலயாமி॥

எல்லாம் அறிந்தவர் அவர், எல்லோருக்கும் தர்மப்பயனை அருளுபவரும் அவரே. அவர்தனது அம்சமாகவே உள்ளபிராணிகளை அவரவர் (வேலையில்) ஈடுபடத் தூண்டுபவரும் அவரே; ஆனால் முன்பிறவியிற் செய்தகர்மாவுக்கு ஏற்ப வழி நடத்துபவர். அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை இதோ நேரே காண்கிறேன்.!

(20)

प्रज्ञामात्रं प्रापितसंविन्निजभक्तं
प्राणाक्षादेः प्रेरयितारं प्रणवार्थम् ।
प्राहुः प्राज्ञा यं विदितानुश्रवतत्त्वा -
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ப்ரஜ்ஞாமாத்ரம் ப்ராபிதஸம்விந்நிஜபக்தம்
ப்ராணாக்ஷாதே: ப்ரேரயிதாரம் ப்ரணவார்த்தம்।
ப்ராஹு: ப்ராஜ்ஞா: யம் விதிதானுச்ரவ தத்வா:
தம் ப்ரத்யஞ்சம் சக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

வேதப்பொருள் அறிந்தபேரறிவாளிகள் எந்த ஒருவரை அறிவே யானவர் என்றும், தன்பக்தனுக்கு அறிவை அருளுபவரென்றும், ப்ராணன், இந்திரியங்கள் ஆகியவற்றை இயக்குகின்றவராயும், ப்ரணவப் பொருளாயும் குறிப்பிடுகின்றார்களோ। அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை. இதோ நேரே காண்கிறேன்.

(21)

यस्याज्ञानादेव नृणां संसृतिबन्धो
यस्य ज्ञानादेव विमोक्षो भवतीति ।
स्पष्टं ब्रूते वेदशिरो देशिकमाद्यं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

யஸ்யாஜ்ஞாநாதேவ ந்ருணாம் ஸம்ஸ்ருதிபந்தோ
யஸ்ய ஜ்ஞானா தேவ விமோக்ஷோ பவதீதி।
ஸ்பஷ்டம் ப்ரூதே வேத சிரோ தேசிகமாத்யம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

உபநிஷதங்கள், எவரொருவரை அறியாததால்தான் மனிதர்களுக்கு ஸம்ஸாரபந்தம் ஏற்படுகிறதென்றும், எவரை அறிந்து விட்டால் மோக்ஷம் கிட்டிவிடுகிறதென்றும் தெளிவாகக் கூறுகின்றனவோ அத்தகைய ஆதிகுருவான தக்ஷிணாமூர்தியை கண்ணால் காண்கிறேன்.।

(22)

छन्नेऽविद्यारूपपटेनैव च विश्वं
यत्राध्यस्तं जीवपरेशत्वमपीदम् ।
भानोर्भानुष्वम्बुवदस्ताखिलभेदं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

சன்னே஽வித்யா ரூபபடேனைவ ச விச்வம்
யத்ராத்யஸ்தம ஜீவபரேசத்வ மபீதம்।
பானோஃ பானுஷ்வம்புவதஸ்தாகில பேதம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம்கலயாமி॥

அஞ்ஞானமாகிய துணியால் மூடப்பட்டிருப்பதால் இந்த உலக மாயை தோன்றுகிறது. ஜீவன், பரமாத்மா என்றபேதமும் அப்போதுதான் தோன்றுகிறது. சூர்யனின் கிரணங்கள் தண்ணீரில் அனைத்து பேதங்களையும் இழந்து விடுகிறது. அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை காண்கிறேன்.

(23)

स्वापस्वप्नौ जाग्रदवस्थापि न यत्र
प्राणश्चेतः सर्वगतो यः सकलात्मा ।
कूटस्थो यः केवलसच्चित्सुखरूप –
स्तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ஸ்வாபஸ்வப்னௌ ஜாக்ரேதவஸ்தாபி ந யத்ர
ப்ராணஃ சேதஃ ஸர்வ கதோ யஃ ஸகலாத்மா।
கூடஸ்தோ யஃ கேவலஸச்சித்ஸுகரூபஃ
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

எவரிடம் ஜாக்ரத்-ஸ்வப்ன-ஸுஷுப்திகள் கிடையாதோ, எவர் ப்ராணனாயும், மனதாயும் எல்லாபிராணிகளிடத்தும் இருந்து ஸகலஸ்வரூபியாயும இருக்கிறாரோ, எவர் சாக்ஷியாகவும், ஸத் சித் ஆனந்த ரூபியாகவும் இருக்கிறாரோ அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை இதோ நான் காண்கிறேன்.

(24)

हाहेत्येवं विस्मयमीयुर्मुनिमुख्या
ज्ञाते यस्मिन्स्वात्मतयानात्मविमोहः ।
प्रत्यग्भूते ब्रह्मणि यातः कथमित्थं
तं प्रत्यञ्चं दक्षिणवक्त्रं कलयामि ॥

ஹாஹேத்யேவம் விஸ்மய மீயுஃ முனிமுக்யாஃ
ஜ்ஞாதே யஸ்மின ஸ்வாத்மதயானாத்
மவிமோஹஃ।
ப்ரத்யக் பூதே ப்ரஹ்மணி யாதஃ கதமித்தம்
தம் ப்ரத்யஞ்சம் தக்ஷிணவக்த்ரம் கலயாமி॥

எவரொருவரை தெரிந்துகொண்டால், ப்ரஹ்மம் தெளிவானபோழ்து அனாத்ம விஷயமான மோஹம் சட்டெனப்போய்விட்டதே இதென்ன ஆச்சர்யம் என்று முனிவர்கள் வியப்படைகிறார்கள். அத்தகைய தக்ஷிணாமூர்த்தியை இதோ நான் காண்கிறேன்.

(25)

यैषा रम्यैर्मत्तमयूराभिधवृत्तै –
रादौ क्लृप्ता यन्मनुवर्णैर्मुनिभङ्गी ।
तामेवैतां दक्षिणवक्त्रः कृपयाऽसा –
वूरीकुर्याद्देशिकसम्राट् परमात्मा ॥

யைஷா ரம்யைர்மத்தமயூராபிதவ்ருத்தைः
ஆதௌ க்லுப்தா யன்மனு வர்ணைःமுனிபங்கீ।
தாமேவைதாம் தக்ஷிணவக்த்ரः க்ருபயா ஸௌ
ஊரீகுர்யாத் தேசிகஸம்ராட் பிரமாத்மா॥

மத்தமயூரம் என்ற அழகிய விருத்தத்தில் முதலில் தக்ஷிணாமூர்த்தி மந்தரத்திலுள்ள எழுத்துக்களால் புனையப்பட்ட மந்திரம் போன்ற இந்த பத்யரசனையை தயவுசெய்து தக்ஷிணாமூர்த்தி குரு ஏற்றுக்கொள்ளட்டும்.

*ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி வர்ணமாலாஸ்தோத்ரம் முற்றிற்று*

